# பகவத் பாதை

BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 3 — தமிழ் மாத இதழ் — • May 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 3 • மே 2014 • வருடச் சந்தா ரூ. 100/-


## அகண்டாகார விருத்தி

- ஸ்ரீ பகவத்



"மனதின் இயற்கை யான நிலையே விடுதலைதான். ஆனால் அதை அடைய நினைத்தால் அதுவே விடுதலைக்கு விரோதமாகிறது".

- ஸ்ரீ பகவத்



கண்டம் என்பது, துண்டு படுத்துதல். அகண்டம் என்பது துண்டுபடாத தன்மை. விருத்தி என்பது வெளிப்பாடு அல்லது அனுபவம்.

உலகத்தை அறிவது கண்டாகார விருத்தி என்றும், இறைவனை அறிவது அகண்டாகார விருத்தி என்றும் சாஸ்திரங்களில் கூறப்படுகிறது.

மரம், மலை, மனிதன், மிருகம் என்று ஒவ்வொன்றையும் தனித்தனியாக தனிமைப்படுத்தி, பிரித்து, தனித்தனி பெயரிட்டுப் புரிந்து கொள்கிறோம். இது கண்டாகார விருத்தி; துண்டுபடுத்தி அறியும் விருத்தி; துண்டுபடுத்தி அறியும் அனுபவம்.

துண்டுபடுத்தாமல் மொத்தமாக அறிவது என்பது அகண்டாகார விருத்தி. அப்படி மொத்தமாக அறிவது என்பது என்ன?

இந்த பேப்பரில் நிறைய எழுத்துகள் உள்ளன. எழுத்துகள் அனைத்தும் வெண்மையான பேப்பரில் இடம்பெற்றுள்ளன. எழுத்துகள் பலவாக உள்ளன. ஆனால் அவற்றை உள்ளடக்கிய பேப்பர் ஒன்றாகவே உள்ளது. பேப்பர் முழுமையாக விரிந்து பரந்துள்ளது. பேப்பரில் எந்தப் பிரிவும் கிடையாது. ஆனால் எழுத்துகள் பலவாறாக வேறுபட்டுள்ளன. எழுத்துக்களை பிரித்து அறிகிறோம். பேப்பரைப் பிரித்து அறிவதில்லை. பேப்பரை மொத்தமாக அறிகிறோம்.

எழுத்துகளைப் பிரித்து அறிவது கண்டாகார விருத்தி - பிரித்துப் பார்த்து அறியும் விருத்தி; துண்டுபடுத்தி அறியும் அனுபவம்.

பேப்பரை அறிவதை மொத்தமாக அறிகிறோம். அகண்டமாக அறிகிறோம். துண்டுபடுத்தாமல் மொத்தமாக அறிகிறோம். கண்டப்படுத்தாமல் அறிகிறோம்.

ஒரு மரத்தை அறிகிறோம்; ஒரு மலையை அறிகிறோம். இவையெல்லாம் கண்டப்படுத்தி அறியும் அனுபவம். கண்டாகார விருத்தி.

ஆகாயத்தை எவ்வாறு அறிகிறோம்?

ஆகாயத்தை துண்டு துண்டாக்கி அறிய முடியாது. கண்டப்படுத்தி அறியமுடியாது. இதுதான் அகண்டாகார விருத்தி.

உலகத்தை அறிவது கண்டாகார விருத்தி. உலகத்தை உள்ளடக்கிய பிரம்மாண்டத்தை அறிவது அகண்டாகார விருத்தி.

ஒரு சப்தத்தை அறிவது கண்டாகார விருத்தி. சப்தங்கள் அனைத்தையும் உள்ளடக்கிய அமைதியுணர்வை அறிவது அகண்டாகார விருத்தி.

உலக விவகாரங்களை அறிந்து அந்த விவகாரங்களில் கலந்து கொள்ளுவது கண்டாகார விருத்தி. ஒவ்வொன்றையும் வேறுபடுத்திப் புரிந்துகொள்கிறோம். இது அகண்டாகார விருத்தி அல்ல.

உலக விவகாரங்கள் எவற்றிலும் கலந்துகொள்ளாமல் விலகியிருக்கும் பந்தப்படாத மௌன சாட்சியாக இருப்பது தான் ஆன்மா அல்லது பிரம்மம்.

அந்த சாட்சியாக இருந்து சாட்சி உணர்வாக இருப்பதுதான் அகண்டாகார விருத்தி.

இப்படி கண்டாகார விருத்தியும், அகண்டாகார விருத்தியும் புரிந்துகொள்ளப்படுகின்றன. ஆன்ம சாதகர்கள் பலரும் கண்டாகார விருத்தியிலிருந்து விடுபட்டு அகண்டாகார விருத்திக்கு வந்திட முயற்சி செய்கின்றனர்.

அவர்கள் வெற்றி பெற சாத்தியமே கிடையாது. ஏனெனில் இந்த அணுகுமுறையே தவறானது.

அகண்டாகார விருத்தி என்பது உணர்வுகளின் சேர்க்கை அன்று. It is not an unifying consciousness,

அது நேர்முகமாக அனுபவிக்கும் ஒரு நிலையைக் குறிப்பதன்று. It is not a positive experience.

அனுபவங்கள் அனைத்தும் தனித்தன்மை வாய்ந்தவையே. அனுபவங்கள் அனைத்தும் கண்டாகார விருத்தியே. அகண்டாகார விருத்தி என்பது ஒரு விருத்தியே அல்ல. எழுத்துகளற்ற பேப்பரைப் பார்த்தாலும் சரி, எதுவுமற்ற ஆகாயத்தைப் பார்த்தாலும் சரி, அது கண்டாகார விருத்தியே.

கண்டாகார விருத்தியிலிருந்து விடுபடுவதே அகண்டாகார விருத்தி. அனுபவங்களிலிருந்து விடுபடுவதே அகண்டாகார விருத்தி.

உண்மையில் அது ஒரு நேர்மறையான நிலை அன்று. It is not a positive state. அது ஓர் எதிர்மறை நிலையே. It is a negative state. ஒரு விடுபட்ட நிலையே. இல்லாத நிலையே;

அனுபவம் வேறு; அனுபவத்திலிருந்து விடுபடுவது வேறு. அனுபவம் என்பது விருத்தி. அனுபவத்திலிருந்து விடுபடுவது என்பது விருத்தியிலிருந்தே விடுபடுவதாகும். அனுபவம் என்பது கண்டாகார விருத்தி. அனுபவத்திலிருந்து விடுபடுவது அகண்டாகார விருத்தி. அதாவது விருத்தியில்லாத விருத்தி. உண்மையில் அதை விருத்தியென்றே கூறமுடியாது.

ஒரு கரும்பலகையில், கருப்பு நிற மையினால் எதையாவது எழுதுவோமானால், அங்கு என்ன புலப்படும்? எதுவும் புலப்படாது.

கரும்பலகையில் வெள்ளைநிற சாக்பீசினால் எழுதினால் தெளிவாகத் தெரியும். பிரித்துக் காட்டப்பட்டால் மட்டுமே, எதனையும் தனிமைப்படுத்தி பார்க்கமுடியும்.

ஒவ்வொன்றையும் பிரித்துப்பார்த்து, ஒவ்வொன்றையும் தனிமைப்படுத்தி, தனிப்பெயரிட்டுப் புரிந்து கொண்டால் மட்டுமே, நாம் இவ்வுலகத்துச் செயல்களில் கலந்துகொள்ளமுடியும்.

எல்லோருக்கும் ஒரே பெயரைக் கொடுத்தால் என்ன ஆகும்? எல்லோருக்கும் "ராமன்" என்ற பெயரைக் கொடுத்தால் என்ன ஆகும்? "ராமன், ராவணனைக் கொன்றான்" என்பதை, "ராமன் ராமனைக் கொன்றான்" என்றே கூறவேண்டியது ஏற்படும்.

வேறுபடுத்திப் புரிந்து கொள்வதன்மூலம் நமது அனைத்துச் செயல்களும் சாத்தியம். நாம் எத்தனையோ மொழிகளைப் பயன்படுத்துகிறோம். ஒவ்வொன்றுக்கும் தனிப்பெயர் கொடுத்து ஒவ்வொன்றையும் தனித்துப் பிரித்துக் காட்டுவதே மொழியாகும்.

மரத்தை மரம் என்றும், மனிதனை மனிதன் என்றும் பிரித்துக்காட்டினால் மட்டுமே அந்த மொழியைப் பயன்படுத்தி அன்றாட வாழ்வை மேற்கொள்ள முடியும்.

நம்முடைய அகநிலையில் இருப்பதென்ன?

நம்முடைய அகநிலையில் பயம் இருக்கிறது; மகிழ்ச்சி இருக்கிறது; துயரம் இருக்கிறது; கோபம் இருக்கிறது; பொறாமை இருக்கிறது; வெறுப்பு இருக்கிறது.

- இப்படி எத்தனையோ விதமான உணர்ச்சிகள் நமது அகத்தினுள்ளே ஏற்படுகின்றன,

மகிழ்ச்சியை விரும்புகின்றோம்; பயத்தையும், துயரத்தையும் வெறுக்கின்றோம். மகிழ்ச்சியையும், அமைதியையும் வைத்துக்கொள்ள விரும்புகின்றோம். பயத்தையும், துயரத்தையும் நம்மைவிட்டு அப்புறப்படுத்த எண்ணுகிறோம்.

நம்முடைய மொழி தேவையில்லாத இடம், கண்டாகார விருத்தி தேவையில்லாத இடம் நமது அகநிலையே. பிரித்துப் பார்ப்பதன்மூலமே சில அனுபவங்களுக்கு - உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவத்தையும், சில உணர்ச்சிகளுக்கு அவமரியாதையையும் கொடுக்கிறோம்.

அகத்தைப் பொருத்த அளவில் பிரிவுதான் தவறானது. அங்கு இன்பமும் துன்பமும் ஒன்றே. மகிழ்ச்சியும், துக்கமும் ஒன்றே.

பிரித்துப் பார்ப்பதன் மூலம், சிலவற்றை தேர்வு செய்துவிடுகிறோம்.

மனதில் ஏற்படும் அனைத்து அனுபவங்களும் தாமாகவே மறைந்து விடுகின்றன. மனதில் ஏற்படும் கண்டாகார விருத்திகள் அனைத்தும் தாமாக உடைந்து அகண்டாகார விருத்திகளாகி விடுகின்றன. மனோலயம் என்பது கண்டாகார விருத்தி. மனோலய நாசம் என்பது அகண்டாகார விருத்தி.

மனதின் இயற்கையான நிலை அகண்டாகார விருத்தியே. அதுதான் விடுதலை - Liberation. அதுதான் முக்தி நிலை. ஆனால் அதை அடைய நினைத்தால் அதுவே கண்டமாகிவிடுகிறது; கண்டாகார விருத்தியாகிவிடுகிறது. ★

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் ஒரு பெண்மணி. நான் பகவத் ஐயாவின் புத்தகங்கள் மற்றும் பகவத் பாதை மாத இதழ்களை தொடர்ந்து படித்து வருகிறேன். புரிதல் எனக்கு நன்றாக புரிகிறது. இந்தப் புரிதலினால் கணவர், குழந்தைகள் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் மீது இருந்து வந்த பற்றும் பாசமும் மிகவும் குறைந்துவிட்டதாக தோன்றுகிறது. இரண்டு மாதங்களுக்கு முன்பாக எனது ஒரே மகன் சாலை விபத்து ஒன்றில் எதிர்பாராதவிதமாக இறந்துவிட்டான். நான் ஒரு வாரத்திற்குள்ளாக ஓர் அளவிற்கு அமைதிக்கு வந்துவிட்டேன். கணவர் மற்றும் இரு குடும்பத்தாரின் பெற்றோர் மற்றும் உடன்பிறந்தோர் என அனைவரும் மிகவும் மோசமாக பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

ஆனால் எனக்கு அந்த அளவிற்கு பாதிப்பு ஏற்படவில்லை. அது ஏன்? எனக்கு பற்று பாசம் இல்லாமல் போய்விட்டதாக குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது? இதற்கு நான் என்ன செய்வது?

பதில் : இந்தப் பெண்மணி தனக்கு ஏற்பட்ட புரிதலினால் தனது கணவர், குழந்தைகள் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் என அனைவரின் மீதும் இருந்து வந்த பற்றும் பாசமும் குறைந்துவிட்டதுபோல தோன்றுவதாகக் கூறுகிறார். கல்லூரியில் இறுதியாண்டு படிக்கும் இவரது ஒரே மகன் சற்றும் எதிர்பாராத விதமாக சாலைவிபத்து ஒன்றில் இறந்துவிட்டான். இந்த துயரமான சம்பவத்திலிருந்து மெல்ல மெல்ல ஒரே வாரத்திற்குள்ளாக மீண்டு தனது கடமைகளை தானே செய்து கொள்ளக்கூடிய அளவுக்கு வந்துவிட்டதாகக் கூறுகிறார். ஆனால் கணவர் மற்றும் இரு குடும்பத்தின் பெற்றோர்கள் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் என அனைவரும் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளார்கள். அதில் ஒரு சிலர் மிகவும் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு பிறகு வீடு திரும்பியதாகவும் கூறினார். இப்படிப்பட்ட சூழ்நிலையில் கூட தான் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக பாதிக்கப்படாமல் இருப்பதாக தனக்கு குடும்பத்தின் மீது இருந்து வந்த பற்றும் பாசமும் குறைந்து போய்விட்டதாக தோன்றுவதாகவும், இதனால் தனக்கு என்மீது வெறுப்பும், குற்ற உணர்ச்சியும் தோன்றுகிறது என்றும் தன்னுடைய நிலையைக் கூறி தான் என்ன செய்வது எனக் கேட்டார் அந்தப் பெண்மணி.

அந்தப் பெண்மணிக்கு பின்வருமாறு விளக்கம் கொடுக்கப்பட்டது :

நடைமுறை வாழ்க்கையில் நமக்கு ஏற்படுகின்ற எண்ணங்கள் இப்படிதான் அடுத்ததாக வரும், இந்த உணர்வு தான் வரும் என்பது எப்படி நமக்கு தெரியாதோ, அதேபோல்தான் அடுத்து நடக்ககூடிய எந்த சம்பவமும் நமக்கு தெரியாது. எண்ணம், உணர்வு, சம்பவம், நிகழ்வு என எதுவாக இருந்தாலும் முடிந்த நிலையில் தான் நம்மால் அடையாளம் கண்டு உணரமுடியும். அதற்கு முன்னால் அதைபற்றி நம்மால் நிச்சயம் தெரிந்துகொள்ள முடியவே முடியாது.

எந்த ஒன்றையுமே முடிந்த நிலையில் மட்டுமே உணரக்கூடிய வகையில்தான் நமது மன இயக்கம் செயல்படுகிறது.

இப்படி உண்மையில் நடந்து முடிந்த சம்பவம் ஒன்றை நாம் எவ்வளவு தான் எதிர்த்து போராடுவதனாலும் அதனால் ஏற்படுகிற மனப்போராட்டமும், உடலில் ஏற்படும் இரசாயன மாற்றமும் தவிர்க்கமுடியாத ஒன்றாகிவிடுகிறது.

நம்மை நாமே எதிர்த்துப் போராடுவது என்பது அர்த்தமற்றது, நியாயமற்றது, முட்டாள்தனமானது ஆகும். நமக்கே தெரியாமல் போராடிவிட்டாலும், உடல்நிலை பாதிப்படைந்தாலும் தவறு கிடையாது. நமது மனதின் கவனத்திற்கு நன்றாக தெரிந்த நிலையில் நாம் நம்மை எதிர்த்துப் போராடாமல் இருந்தால் போதும். நம்மை நாம் எதிர்த்து எதுவும் செய்யாத நிலையில் எவ்வளவு துயரமான சம்பவத்தின் நினைவாகவும், உணர்வாகவும் என எதுவாக இருந்தாலும் அவைகளிலிருந்து விடுதலையுற்று தாமாகவே நமது இயல்பான நிலைக்கு வந்து விடுவோம்.

உங்கள் ஒரே மகன் சாலை விபத்தில் இறந்துவிட்டான் என்பது நடந்து முடிந்துபோன உண்மை சம்பவம். இனி இந்த சம்பவத்தை எப்படியும் மாற்றவே முடியாது என்பதை நீங்கள் நன்றாக புரிந்துகொண்டு, உங்களின் மனப்போராட்டத்தை எதிர்த்து நீங்களாக எதுவும் போராடாமல் விட்டுவிட்டதால் மற்றவர்களை காட்டிலும் உங்களின் இயல்பு நிலைக்கு வெகுவிரைவாக வந்துவிட்டீர்கள்.

நீங்கள் மட்டும் தனிமையாக இருக்கும் சூழ்நிலையில் உங்களது மகனைப்பற்றி பெரிய பாதிப்பு எதுவும் இல்லாமல் இருந்தாலும், அதே நேரம் கணவர் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் என மற்றவர்கள் உங்களது மகனை பற்றிய நினைவுகளைக் கூறி அழும்போது மட்டுமே நீங்களும் அவர்களுடன் சேர்ந்து அழுவீர்கள். இந்த நிலையில் தான் மற்றவர்களுடன் உங்களை நீங்களே ஒப்பிட்டுப் பார்த்து நமக்கு நமது மகன் மீது பற்றும் பாசமும் குறைந்து போய்விட்டதோ என்ற எண்ணம் தோன்றுகிறது.

மனதைப்பற்றிய புரிதல் இல்லாத காரணத்தினால் தான் உங்கள் கணவர் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் என அனைவரும் உங்களது மகனைப் பற்றிய முடிந்து போன உண்மை சம்பவத்தை ஏற்றுக்கொள்ளாமல் இப்படி நடந்திருக்கக்கூடாது எனப் போராடிப் போராடி மனம் பாதிக்கப்பட்டு, நமக்கு மட்டும் ஏன் இப்படி நடந்தது என வருத்தப்பட்டு மேலும் அந்த எண்ணத்திற்கு வலிமையைக் கொடுத்து, அதனால் உடல் நிலையும் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப்படும் நிலையில் இருக்கிறார்கள்.

இப்படி இருந்தபோதும் அவர்களும் நாளுக்கு நாள் உங்கள் மகன் இறந்த அந்த சம்பவத்திலிருந்து வெளியே வந்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். என்ன வேறுபாடு என்றால் புரிந்துகொண்ட நீங்கள் விரைவாகவும், மற்றவர்கள் சற்று காலதாமதமாகவும் இயல்பு நிலைக்கு திரும்பிக்கொண்டிருக்கிறார்கள்.

உதாரணமாக நாம் தினசரி செய்தித்தாளைப் படிக்கிறோம். அதை படிக்கும் போது செய்தித்தாளில் வரும் விபத்துப் பற்றிய செய்தி, கொலை சம்பவ செய்தி, அரசியல் ஊழல் செய்திகள் என அடுத்தடுத்த பக்கங்களை நாம் திருப்பும்போது அந்த அந்தச் செய்தியைக் கடந்து நமது மனமும் வந்து கொண்டே இருக்கும். அதில் நமது ஊரில் நமது பகுதியை சேர்ந்த நமக்கு நன்கு தெரிந்த நபரின் செய்தி என்றால் "அடடா இவருக்கு இப்படி நேர்ந்துவிட்டதே" என மற்ற செய்திகளை விட மனம் இந்த செய்திக்கு அதிக முக்கியதுவம் கொடுக்கும். காரணம் அவரைப் பற்றி நமக்கு ஓரளவுக்கு நன்றாகத் தெரியும். மேலும் நாம் பேசியும் பழகியும் உள்ள நபர் என்பதால் மனம் அந்த சம்பவத்தில் மூழ்கிவிடும். அந்த சம்பவத்தைப் பற்றி அதிகமாக சிந்திக்கும்.

இதுபோல் நமக்கு மிக நெருங்கிய உறவினர் ஒருவருக்கு ஏதோ ஓர் சம்பவம் என்றால் "அடடா, இப்படி நேர்ந்துவிட்டதே; இனி அந்தக் குடும்பத்தார் என்ன செய்வார்கள்" என நினைத்து மனம் அதிலேயே சிக்கித்தவிக்கும். நாம் அந்த சம்பவத்திலிருந்து விடுபட ஒரு சில நாட்கள் கூட பிடிக்கும்.

அதே போல் இங்கு நடந்து இருப்பது நமது குடும்பத்தில் ஒருவர், வயதில் இளைஞர், வாழவேண்டிய தகுதியை உடையவர் என்பதால் மனதில் அதன் தாக்கம் சற்று அதிகமாகவே இருக்கும். நாம் அதிலிருந்து மெல்ல மெல்ல தான் வெளிவருவோம். என்னதான் கட்டிப்புரண்டாலும் உயிருக்கு உயிராய் நேசித்து இருந்தாலும் இறந்தவர் இனி வரப்போவதில்லை. அதனால் புரிந்து கொண்ட நீங்கள் விரைவாகவும் மற்றவர்கள் மெல்ல மெல்ல அந்த சம்பவத்திலிருந்து வெளியே வந்துகொண்டு தான் இருக்கிறார்கள்.

இந்த சூழ்நிலையில் முடிந்தவரை மற்றவர்களுக்கு என்ன என்ன உதவிகள் உங்களால் செய்ய முடியுமோ அதைச் செய்து முடிப்பது தான் உங்களின் சரியான கடமையாக இருக்கமுடியும்.

பொதுவாக கணவர், குழந்தைகள் மற்றும் குடும்ப உறுப்பினர்கள் என அனைவரின் மீதும் பற்றும் பாசமும் இருக்கவேண்டும் என்றுதான் நாம் நினைக்கிறோம். உண்மையில் அவர்கள் மீது உள்ள உங்கள் பாச உணர்வை அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. அவர்களுக்குத் தேவையான உங்களின் உதவிகரமான செயல்களால் மட்டுமே உங்கள் பற்றுப் பாசத்தை அவர்களால் புரிந்து கொள்ளமுடியும்.

ஓர் உதாரணம். நீங்கள் உங்களை பூஜ்ஜியமாக பாவித்துக் கொள்ளுங்கள். நீங்கள் மனதில் தோன்றும் உணர்வுகளோடு போராடாமல் இருக்கும்போதுதான் 0 நிலைக்கு வரமுடியும். அப்படி நீங்கள் 0 வாக இருக்கும்போது தான் உங்கள் கணவர், குழந்தைகள், குடும்ப உறுப்பினர்கள் என மற்றவர்கள் +3, +1, -2, -5 என்று எந்த நிலையில் மற்றவர்கள் இருக்கிறார்கள் என்பதை உங்களால் புரிந்துக் கொள்ளமுடியும்.

நீங்கள் 0 வாக இருக்கும்போது மற்றவர்கள் எதை எதை விரும்புகிறார்கள் என்பதை உங்களால் கவனிக்கமுடியும். அப்படி கவனித்து அவர்களுக்கு தேவையானவற்றை புரிந்து செயல்படும்போது எப்படியும் அவர்கள் உங்களிடம் வந்து சேர்ந்தே ஆகவேண்டும், வேறு வழியே அவர்களுக்கு கிடையாது.

ஐஸ்கட்டி தண்ணீரின் இயல்பான தன்மைக்கும், கொதிக்கும் சுடுதண்ணீரும், தண்ணீரின் இயல்பான தன்மைக்கும் திரும்பி வருவது தான் இயற்கை.

நீங்கள் தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மையை எப்படிதான், எவ்வளவு தான் வேகமாக ஆட்டிவிட்டாலும் அது தன் இயல்பு நிலைக்கு மிக விரைவில் வந்தே தீரும். அதுபோல் மனதின் இயக்கத்தைப் புரிந்துகொண்ட உங்களுக்கு என்னதான் நடந்தாலும் எவ்வளவு தான் பாதிப்பு ஏற்பட்டாலும் இயல்பு நிலைக்கு மற்றவர்களைக் காட்டிலும் வெகுவிரைவாக வந்துவிடுவீர்கள்.





நீங்கள் ஒரு வாரத்திற்குள்ளாக இயல்புநிலைக்கு வந்ததால் பற்றும்பாசமும் இல்லாமல் போய்விட்டதாக நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். மற்றவர்கள் இரண்டு மாதத்திற்கு பிறகு இயல்பு நிலைக்கு வருகிறார்கள். இப்போது மட்டும் அவர்களுக்கு பற்றும் பாசம் இல்லாமல் போய்விட்டதா என்ன? இதை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதனால் மற்றவர்களிடம் நீங்கள் 0வாக இருந்து செயல்படும்போது அவர்கள் நிச்சயமாக மற்றவர்களைக் காட்டிலும் உங்களிடம் பற்றும் பாசமும் உடையவர்களாக இருப்பார்கள். நாம் மற்றவர்களின் இயல்பை அறிந்து அவர்களுக்குத் தேவையான செயல்களை செய்வது மட்டுமே உண்மையான பற்றும் பாசமுமாக இருக்கமுடியும் என்று கூறப்பட்டது.

"நமது பற்றையும் பாசத்தையும் நமது செயல்களால் மட்டுமே காட்டமுடியும்".

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்!

உலகெங்கும் நமது பகவத் பாதை சென்றடைந்து அனைவருக்கும் ஞானத்தெளிவை வழங்கவேண்டும் என்ற நோக்கில் நாம் செயல்பட்டுக்கொண்டிருக்கின்றோம்.

உலகில் பலர் ஆன்மிக அனுபவத்தில் ஈடுபாடு கொண்டவர்களாக இருக்கிறார்கள். பலர் சுகபோக அனுபவத்தில் ஈடுபாடு கொண்டவர்களாக இருக்கிறார்கள். இவர்களில் நமது பகவத் பாதை யாருக்கு தேவை?

ஆன்மிக அனுபவத்தை தேடுபவர்களுக்கா? அல்லது சுகபோக அனுபவத்தை தேடுபவர்களுக்கா?

உண்மையில் நமது பகவத் பாதை அனைவருக்குமே தேவையான ஒன்றாகத்தான் உள்ளது.

ஏனெனில் சிறு குழந்தைகளைத் தவிர மற்ற அனைவருமே அவரவர் வாழ்வில் கவலைகளோடும் பிரச்சினைகளோடும் போராடிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

பிரச்சினைகளுக்கு செல்வந்தர்கள், ஏழை என்ற பாகுபாடு கிடையாது. உயர்பதவியில் இருப்பவர், சாதாரண பதவியில் இருப்பவர் என்ற பேதமில்லை. அனைவருமே வாழ்வில் அவரவர்களுக்கு ஏற்ப பிரச்சினைகளோடு போராடிக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

இதில் ஞானத்தைத்தேடி விடுதலை அடையவேண்டும் என்று முயல்பவர்கள் வெகு சிலரே இருந்தாலும், கவலைகளிலிருந்தும் பிரச்சினைகளிலிருந்தும் விடுபடவேண்டும் என்று முயலாதவர்கள் எவருமில்லை என்பதே உண்மை.

தற்போது நமது பகவத் பாதை மாத இதழானது நம் அனைவரது இல்லங்களையும் வந்தடைந்து அனைவருக்கும் ஞானத்தெளிவைக் கொடுத்து நமது பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வாக அமைந்து மனதிற்கு விடுதலையை வழங்கிக் கொண்டிருக்கிறது என்பது நாம் அறிந்ததே....

எனவே நமது பகவத் பாதையானது அனைவருக்குமே தேவையான ஒன்றாகத்தான் உள்ளது.

"யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்" என்ற ஓர் உயர்ந்த சிந்தனையில் நமது பகவத் பாதை உலக மக்கள் அனைவருக்கும் சென்றடைந்து அவர்களுக்கும் தீர்வாக அமையவேண்டும் என்பதை நமது நோக்கமாக கொண்டு செயல்பட்டுக்கொண்டு இருக்கிறோம்.

ஆதலால் பகவத் பாதையில் பயணிக்கும் நீங்கள் பரிந்துரைக்கும் அனைவருக்கும் நமது பகவத் பாதையை முதல் மூன்று மாதத்திற்கு இலவசமாக அனுப்ப நாம் தயாராக இருக்கிறோம். அதன்பிறகு அவரவர்கள் விருப்பத்தின்பேரில் சந்தாதாரராக இணைந்து கொள்ளலாம்.

உண்மை எவ்விடத்திலும் மிக எளிமையாகத்தான் இருக்கிறது. நாம் அதைத் திறந்த மனதுடன் அனுகவேண்டியதே தேவையானதாக உள்ளது. எனவே உண்மையை அனைவரிடமும் உரைக்க வேண்டியது நமது கடமை, அதனோடு இணைந்துகொள்வது அவரவர் உரிமை. உண்மையை உரைக்கும் பணியில் பகவத் மிஷன் பல வழிகளிலும் செவ்வனே தொண்டாற்றிக் கொண்டிருக்கிறது. அந்த உயர்ந்த தொண்டில் உங்களையும் இணைத்துக் கொள்ள அழைக்கின்றோம்.

ஒரு கூட்டுக்குடும்பத்தை எடுத்துக்கொண்டால் அதில் குடும்ப உறுப்பினர்கள் பலர் இருப்பார்கள். அவர்களில் பொருள் ஈட்டும் வாய்ப்பு ஒரு சிலருக்கே இருக்கும். இருப்பினும் அந்த சிலரின் உதவியால் அனைவரது தேவைகளும் நிறைவேறும்.

அதுபோல் நமது பகவத் பாதை என்ற கூட்டுக்குடும்பத்தில் உலகமக்கள் அனைவரும் உறுப்பினர்களே. அனைவருக்கும் இவ்வுண்மையை கொண்டுசெல்வதே நமது சேவை.... அதற்கு வாய்ப்பும் வசதியும் உள்ளவர்கள் உதவி தேவை... அவர்களை நன்கொடைகள் அளிக்கவும் நற்செயல்கள் ஆற்றவும் வேண்டுகிறோம்.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## நன்கொடை வேண்டுகோள்

நமது பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் ஒரு வேண்டுகோள்

நமது வாழ்வியலின் உயர்ந்த நிலையான ஞானத்தெளிவை அனைவருக்கும் கொண்டு சேர்க்கும் உயர்ந்த பணியை பல வழிகளிலும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நாம் எடுத்து செயல்பட்டு வருகிறோம்.

நீங்கள் எத்தனையோ வகைகளில் பல நல்ல காரியங்களுக்கு நன்கொடை வழங்கி உதவுபவராக இருக்கலாம். அந்த வகையில் எத்தகைய துன்பங்களையும், துயரங்களையும், எளிதாக எதிர்கொள்ளும் ஒரு தீர்க்கமான மனத்தெளிவைக் கொடுக்கும் ஞானப்புரிதலை அனைவருக்கும் எடுத்துச்செல்லும் முயற்சியில் இருக்கும் நமது ஸ்ரீ பகவத் மிஷனிற்கும் வழங்கும் பட்சத்தில் உங்கள் நன்கொடையும் ஒரு புனிதத் தொண்டிற்கு வழங்கப்படும் ஓர் உயர்ந்த பங்களிப்பாக அமைந்துவிடும்.

பங்கேற்று உதவ விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் பங்கேற்கலாம்..

1. ஆண்டு நன்கொடையாளர் : ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடையாளர் : ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்க **Cheque, D.D.** அல்லது **M.O.** ஆக அனுப்பலாம். அல்லது, **HDFC, A/c. No. 1590762000075, NIFT IFSC : HDFC 0001590** என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம்.

ஸ்ரீபகவத் மிஷன், சேலம்.

# பகவத் பாதை இலவச இதழ் பெற

நமது பகவத்பாதை மாத இதழை புதிய அன்பர்களுக்கு அறிமுகப்படுத்துவதற்காக முதல் மூன்று மாதத்திற்கு இலவசமாக வழங்க இருக்கிறோம். அதன் பிறகு அவரவர் விருப்பத்திற்கு ஏற்ப சந்தாதாரராக இணைந்து கொள்ளலாம்.

3 மாத இலவச பிரதியைப் பெற விரும்புபவர்கள் அவர்களது முழு முகவரியை (கண்டிப்பாக Pincode எண்ணுடன்) அலைபேசி எண்ணுடன் (Cell No) கீழ்கண்ட எண்ணிற்கு "Bagavath Pathai for 3 months" என்று Type செய்து அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

SMS அனுப்பவேண்டிய எண் : 9942219065

அல்லது

பாதை பரிந்துரைக்கும் நபர்களின் முழு முகவரியை அலைபேசி எண்ணுடன் எழுதி தபாலில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.

செல் : 9789165555, 9994205880

## ஏற்காடு ஞானமுகாம்

கோடை வெயிலுக்கு இதமாக ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சேலம் ஏற்காட்டில் மே மாதம் 23, 24 மற்றும் 25 ஆகிய மூன்று நாட்கள் ஞான முகாம் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது கோடை வெப்பத்தின் தாக்கத்தை தவிர்க்க இயற்கைச் சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் அமைந்துள்ள House of Peace - என்ற அமைதி இல்லத்தில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.ஞானத்தெளிவு பெற இது ஒரு சிறந்த வாய்ப்பு. ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளது. 14 வயது பூர்த்தியானவர்கள் மட்டுமே பங்கு பெறலாம்.

நாள் : 23-5-2014 வெள்ளிக்கிழமை மதியம் 3-00 மணிமுதல்
25-5-2014 ஞாயிற்றுக்கிழமை மாலை 3-00 மணிவரை

இடம் : House of Peace (Glass Banglow) அமைதி இல்லம், ஏற்காடு.

உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ.1500/- மட்டும்.

இடம் மிகவும் குறைவாக இருப்பதால் பங்கேற்க ஆர்வமுள்ள அன்பர்கள் விரைவாக பதிவு செய்திட வேண்டுகிறோம்.

பதிவு செய்யும் வழிகள் :

1. www.pravaagam.org/event (or) www.pravaagam.org என்ற website-ல் Credit Card (or) Debit Card மூலம் செலுத்தலாம்.

2) M. O. ஸ்ரீ பகவத் மிஷன், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003 என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

3) வரை ஓலை (D.D) அல்லது செக் (Cheque) அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

5) நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC Bank A/C No : 15907620000075
NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

மேலும் விபரங்களுக்கு : 9994205880, 9789165555, 9443290559

**அனைவரும் வருக! தெளிவு பெறுக!**

சேலம் புதிய பஸ் நிலையம் → ஏற்காடு பஸ் நிலையம் → பக்கோடாபாயிண்ட் செல்லும் வழியில்
1.6 கி. மீ. தொலைவில் HOUSE OF PEACE



# இராஜபாளையத்தில் ஞானமுகாம்

இராஜபாளையம் அரவிந்த் ஆஸ்ரமத்தில் சென்ற ஏப்ரல் மாதத்தில் 12, 13, 14 ஆகிய தேதிகளில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் ஞான முகாம் மிக சிறப்பாக நடைபெற்றது. பல மனவளக்கலை பேராசிரியர்கள் உட்பட பல புதிய அன்பர்கள் கலந்துகொண்டு பயன் அடைந்தனர். 12-ம் தேதி மாலை கோடைக்கு இதமான மழையோடு இனிதே அறிமுகத்தோடு ஆரம்பிக்கப்பட்டது. தொடர்ந்து அடுத்தடுத்த நாட்களில் ஐயா அவர்கள், "ஞானப் புரிதல்", "அகம் புறம்", "நான் யார்?" "ஞானத்தெளிவும், தெளிவில் உறுதியும்" என்ற தலைப்புகளில் சிறப்புரை வழங்கினார்கள். இறுதிநாளில் ஐயம் தெளிவில் ஆழமான பதிலும் கிடைத்தது. மேலும் இறுதிநாளில் கம்பம் அக்கு ஹீலர் உமர் பாரூக் அவர்கள் பகவத் ஐயாவினால் தான் பெற்ற ஞானத் தெளிவு பற்றியும், அதன் பயன்பாடு பற்றியும் அனைவருடனும் தன் அனுபவத்தை பகிர்ந்து கொண்டார்.

மூன்று நாட்களும் உடல் ஆரோக்கியத்திற்கான இயற்கை உணவோடு மன ஆரோக்கியத்திற்கான ஞானத்தெளிவை பெற்ற அனுபவம் அனைவருக்கும் பயனுள்ளதாகவும் இனிமையாகவும் இருந்தது.

தினமும் காலை மாலை இடைவேளைகளில் கோடைக்கு இதமாக நன்னாரி சர்பத்தும் தேன் கலந்த நெல்லி சாறும் வழங்கப்பட்டன. இயற்கை எழில் மிகுந்த அரவிந்த் ஆஸ்ரமத்தின் அமைதியான சூழலில் ஞானமுகாம் அனைவருக்கும் பயன் தரும் வகையில் சிறப்பாக நடைபெற்றது.

இந்த ஞானமுகாமிற்கு இலவசமாக இடமளித்து இயற்கை உணவும் அளித்து பேருதவி புரிந்து மேலும் வருகின்ற ஒவ்வொரு ஆண்டும் ஞானமுகாம் நடத்த அனுமதியும் வழங்கிய இராஜபாளையம் அரவிந்த் ஹெர்பல் சென்டரின் தலைவர் அரவிந்த் ஐயா அவர்களுக்கு அனைவரின் சார்பிலும் நன்றியை தெரிவித்துக்கொள்வோம்.

மேலும் ஞானமுகாம் சிறப்பாக நடைபெற உடனிருந்து அனைத்து உதவிகளையும் செய்துகொடுத்த திரு. சங்கர நாராயணன் அவர்களுக்கும், திரு. முத்துராஜ் அவர்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.



ஸ்ரீ பகவத் ஐயாவுடன்
அக்கு Hr. உமர் பாரூக் அவர்கள்



ஸ்ரீ பகவத் ஐயாவும்,
இராஜபாளையம் அரவிந்த் ஐயாவும்



கேள்வி - பதில்
நிகழ்வின்போது



“முடிந்தது முடிந்ததுதான், நடந்தது நடந்ததுதான்” அதை மாற்றியமைக்க முடியாது என்பதை புரிந்து கொண்டு அதனோடு முரண்படாமல் அதை அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் ஞானம்!

- ஸ்ரீபகவத்

# ஜென்கதை

## "எதுவும் உதவாது"

பிரபு ஒருவருக்கு ஞானத்தாகம் ஏற்பட்டது.

தெளிவுபெற வேண்டி பல மதங்களையும், சடங்குகளையும், பல தத்துவங்களையும் விரிவாக அலசினார் அவர்.

உருவ வழிபாடு, அருவ வழிபாடு, வேள்வி, யாகம் இவற்றை விளங்கிக் கொள்ள அவற்றில் பல வழிகள் சொல்லப்பட்டிருந்தன. அதன்மூலம் என்ன யாகம் செய்தால் என்ன பலனைப் பெறலாம். எந்த தெய்வத்திடம் எதை பிரார்த்தனை செய்து பெறலாம். எது நல்ல நேரம், எது கெட்ட நேரம், எந்த நேரத்தில் எது செய்தால் வெற்றி கிடைக்கும் என எல்லாவற்றையும் கற்றுக்கொண்டார். மேலும் வாழ்க்கையில் எல்லா வசதிகளையும் பெற வாஸ்து சாஸ்திரம், எண் கணிதம் போன்ற கலைகளையும் தெரிந்துகொண்டார். இருப்பினும் இவற்றால் அவர் மனம் திருப்தி அடையவில்லை. ஞானம் கிடைக்கவில்லை.

இறுதியாக ஒரு ஞானியை நாடி விளக்கம் பெறுவதென்று முடிவு செய்தவர், பலரிடம் தீர விசாரித்த பின் இவர் தான் அதற்குத் தகுதியானவர் என்று உணர்ந்த ஒரு குருவை அடைந்தார்.

இவர் சென்ற சமயம் குரு ஒரு மரத்தினடியில் வெறுமனே அமர்ந்து கொண்டு இருந்தார்.

வந்தவர் அவரை வணங்கினார். "குருவே! நான் ஆன்மிகத்தில் உருவ வழிபாடு, அருவ வழிபாடு, வேள்வி, யாகம் பற்றி தெரிந்துகொண்டு பல கலைகளையும் கற்றுக்கொண்டேன் ஆனால் எனக்கு ஞானம் மட்டும் புரியவில்லை. அதைத் தெரிந்து கொள்ள ஆவலாயிருக்கிறது. ஆகவே, அதனை எனக்கு விளக்கமாகச் சொல்லவேண்டும்!" என்றார்.

குரு வந்தவரிடம் "ஞானத்தைப் பற்றி ஜென் தத்துவம் என்ன சொல்கிறது தெரியுமா?" என்று ஆரம்பித்தவர் சற்று மௌனமாக இருந்தார். வந்தவர் குரு சொல்வதை கேட்க மிக ஆவலாக கூர்ந்து கவனித்தார். ஆனால் குரு, "போய்ச் சிறுநீர் கழித்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உட்புறம் சென்றுவிட்டார்.

வந்தவருக்கு ஒரு மாதிரியாகிவிட்டது. "சே! என்ன இது? இவரைப் பற்றி எவ்வளவு உயர்வாகக் கேள்விப்பட்டோம். இவரிடமிருந்து எவ்வளவு பெரிய விளக்கத்தை எதிர்பார்த்தோம். இவர் என்னடாவென்றால் கிராமப்புற விவசாயியைப் போல் சர்வ சாதாரணமாகச் சிறுநீர் கழிக்கப் போவதாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டாரே!" என்று மனத்துக்குள் நினைத்தாலும் ஏதும் பேசாமல் மவுனமாக இருந்தார். சற்று நேரம் கழித்து திரும்பி வந்த குரு "புரிந்ததா?" என்பதுபோல் தலையசைத்துக் கேட்டார்.

வந்தவர் விழித்தார். குரு என்ன சொல்ல வருகிறார் என்பது புரியவில்லை.

எனவே குருவிடம், "ஐயா நீங்கள் ஞானத்தைப் பற்றி எதுவும் சொல்லியதுபோல் தெரியவில்லையே, எனக்கு எதுவும் புரியவில்லையே" என்றார். குரு அவரிடம் "நீங்கள் ஆன்மிகத்தைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் தெரிந்து வைத்திருக்கலாம். நீங்கள் அனைத்து வழிபாட்டு முறைகளையும் தெரிந்தவராக இருக்கலாம், எல்லா கலைகளையும் தெரிந்து கொண்டவராகவும் இருக்கலாம். நீங்கள் யாராக இருந்தாலும் உங்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொள்வதே உங்களுக்கு உபயோகமாக இருக்கும். செயல் உங்கள் கை வசம் மட்டுமே உள்ளது. உங்கள் செயலைக்கொண்டே உங்கள் தேவைகளை நிறைவேற்ற முடியும். உங்களுக்கு சிறுநீர் வந்தால் நீங்கள்தான் கழித்தாகவேண்டும். எனக்கு வந்தால் நான்தான் கழித்தாக வேண்டும். அவரவர்களுக்கு அவரவரேதான் செய்தாக வேண்டும்.

எனக்கு பதில் உங்களை அனுப்பமுடியுமா? அல்லது உங்களுக்கு பதில் நான்தான் போகமுடியுமா?

அதுபோல்தான் எல்லாவற்றையும் நீங்கள் கற்றிருந்தாலும் ஞானத்திற்கு எதுவும் உங்களுக்கு உதவாது. உங்கள் செயல்மட்டுமே உங்களுக்கு உதவியாக இருக்கும். மற்ற எதுவும் உதவாது என்பதை புரிந்துகொண்டால் போதும்" என்றார்.

வந்தவருக்கு ஞானம் பிறந்தது. அவரவர் வாழ்வு என்பது அவரவர் கையில் என்பதை புரிந்துகொண்டார்.

ஞானம் என்பது உபதேசங்களால் வருவது இல்லை. விழிப்புணர்வை எவரும் சடங்குகளால் பெறுவதில்லை.

தன் வாழ்வைத் தானே வாழ்வதன் மூலம் தான் அனுபவம் பெறமுடியுமே தவிர, பிறர் அனுபவங்களைக் கொண்டு அதை நாம் புரிந்துகொள்ள முடியாது.





**Book packet** containing printed books

**Peritical**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555